# कार्तवीर्यार्जुन–उपासना–पद्धतिः

# கார்த்தவீர்யார்ஜுன–உபாஸனா–பத்ததிः

(வழிபாட்டு முறை)

# KARTAVIRYARJUNA-UPASANA-PADDHATIH



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

## மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

Thanjavur Sarasvati Mahal Series No. 568

# कार्तवीर्यार्जुन–उपासना–पद्धतिः

## கார்த்தவீர்யார்ஜுன-உபாஸனா-பத்ததி:
(வழிபாட்டு முறை)

# KARTAVIRYARJUNA-UPASANA-PADDHATI

**Critically Edited by**

**Dr. V.M. ANANTHA NARAYANAN,** M.A., Ph.D.,
Associate Professor in Sanskrit,
National College, Tiruchirapalli
(Guest Editor, T.M.S.S.M. Library, Thanjavur)
and
**Tmt. L. ANITHA,** M.A.,
Sanskrit Pandit,
T.M.S.S.M. Library,Thanjavur.

**THANJAVUR MAHARAJA SERFOJI'S**

**SARASVATI MAHAL LIBRARY AND RESEARCH CENTRE**

**THANJAVUR.**

**2015** **Price: Rs. 100-00**

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title | : Kartaviryarjuna-Upasana-Paddhati |
| Editors | : V.M. Ananthanarayanan & L. Anitha |
| Publisher | : Director, Sarasvati Mahal Library & Research Centre, Thanjavur. |
| Publication | : 568 |
| Language | : Sanskrit & Tamil |
| Edition | : I Edition |
| Date of Publication | : 2015 |
| Paper used | : 18.6 kgs. T.NP.L. |
| Size of the Book | : 21 x 14 c.m. |
| Printing Type used | : 16 & !2 pt. |
| Number of pages | : 84 |
| No. of copies | : 500 |
| Printer | : Sarasvati Mahal Library |
| Binding | : Cardboard |
| Subject | : Mantra |
| ISBN | : 978-93-85343-06-3 |
| Price | : Rs. 100.00 |


CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

# வெளியீட்டாளர் முகவுரை

உலகப் புகழ்பெற்ற மிகப் பழமையான நூலகங்களுள் ஒன்றான தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. இந்நூலகத்திலுள்ள அரிய சுவடிகளை நூல்களாக சிறப்பான முறையில் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. அவ்வரிசையில் கார்த்தவீர்யார்ஜுன - உபாஸனா பத்ததி: என்னும் இந்நூல் தற்போது முதல் பதிப்பாக வெளியிடப்படுகின்றது.

இந்நூல் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் பாதுகாப்பில் உள்ள பதினொன்று சுவடிகளை நுண்ணாய்வு செய்து வெளியிடப்பட்டதாகும். இந்நூலகத்தில் இதற்கான சுவடிகள் இருபத்திரண்டு இருந்த போதிலும், மற்றவை மேற்கூறிய பத்துச் சுவடிகளின் பிரதியாக இருப்பதால் அவற்றை பாடபேதங்களுக்கு மட்டும் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

மிகச் சிறிய நூலாக இருப்பினும், வாழ்க்கையில் தினந்தோறும் பயன்படும் நூலாக அமைவதால் மிகுந்த கவனத்துடன் நுண்ணாய்வு செய்து, மந்த்ரங்களிலும் யந்த்ரங்களிலும் தவறு ஏற்படாத வண்ணம் இந்த நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. பொதுவாக காணாமல் போன பொருட்களையும், மனிதர்களையும் கண்டுபிடிக்க உதவும் ஒரு சிறந்த மந்த்ர சாஸ்திர நூலாக இது அமையும். முறைப்படிப் பயின்று, பயன்படுத்தினால், மனித குலம் அனைத்துக்கும் நன்மை பயக்கும் நூலாக இது அமையும். நமது நூலகப் பதிப்பான 'பிரபஞ்சசார-சார-சங்கிரகம்' என்னும் நூலின் இரு பாகங்களிலும் காணப்படும் பெரும்பாலான மந்த்ரங்கள் அனைத்துக்கும், இந்த நூலில்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

(கார்த்தவீர்யார்ஜுன உபாசனை) காணப்படுவது போன்று விளக்கங்கள் இந்நூலகச் சுவடிகளில் காணக்கிடைக்கின்றன.

இந்நூலின் பதிப்புப் பணியைச் சிறப்பாகச் செய்துள்ள தஞ்சை சரசுவதி மகால் நூலக சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் முனைவர் வி. எம். அனந்தநாராயணன் மற்றும் இந்நூலக சம்ஸ்கிருதப்பண்டிதர் திருமதி அனிதா ஆகியோர்களுக்கு என் பாராட்டுகள்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் (பொ.) திரு. கி. கணேசன், B.Com., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ்.சுதர்ஷன், M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கும் மற்றும் நூலகப்பணியாளர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
20-09-2015

**டாக்டர் என். சுப்பையன், இ.ஆ.ப.,**
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

# முன்னுரை

கார்த்தவீர்யார்ஜுன-உபாஸனா-பத்ததி (வழிபாட்டு முறை) என்ற தலைப்பில் வெளிவரும் இந்த நூல் நமது தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் பாதுகாப்பில் உள்ள பதினொன்று சுவடிகளை நுண்ணாய்வு செய்து வெளியிடப்பட்டதாகும். நமது நூலகத்தில் இதற்கான சுவடிகள் இருபத்திரண்டு இருந்த போதிலும், மற்றவை மேற்கூறிய பத்துச் சுவடிகளின் பிரதியாக இருப்பதால் அவற்றை பாடபேதங்களுக்கு மட்டும் பயன்படுத்தினோம். ஒரு சில சுவடிகள் நிறைவு பெறாமலும், சிலவற்றுள் எழுத்துப் பிழைகள் மிகுந்தும் காணப்படுகின்றன. எல்லாச் சுவடிகளும் காகிதச் சுவடிகளாக அமைந்தாலும் அவற்றுள் காணப்படும் எழுத்துக்கள் வங்காள மொழி எழுத்துக்களைப் போன்ற ''தேவநாகரி லிபி''யில் அமைந்துள்ளதாலும் இவை யாவும் மன்னர்கள் காசி யாத்திரை சென்றபோது அங்கிருந்து கொண்டுவந்தவைகளாக இருக்கக்கூடும். சுவடி எண் 2235 (D.No. 506, NNB: 14531) இல் காணப்படும் எந்திரத்தில் "துளஜா ராஜவர்மாணம் பாலய" என்ற குறிப்பு காணப்படுவதால், இது அரசர் துளஜாவுக்கு (கி.பி. 1763-87) பயன்படுத்தப்பட்டதாக இருக்கலாம்.

நேரடியாக பயன்படுத்தப்பட்ட பதினொன்று சுவடிகள்

1. B.No. 8398 - कार्तवीर्यार्जुनमहामन्त्रः, कार्तवीर्यार्जुनमालामन्त्रः
2. B.No. 6877 - कार्तवीर्यमन्त्रः
3. B.No. 6885 - कार्तवीर्यमन्त्रः
4. B.No. 6884 - विंशत्यक्षरमन्त्रः
5. B.No. 6882 - कार्तवीर्यार्जुनमहामन्त्रः
6. B.No. 6883 - कार्तवीर्यमन्त्रः

இவை தவிர பிற்சேர்க்கையில் காணப்படும் எந்திரங்கள் எழுதப்பட்ட சுவடிகள்-

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

7. MSS.No. 2229, NNB No. 14525 -
कार्तवीर्यार्जुनचक्रम्, अग्निचक्रम् च

8. MSS.No. 2274, NNB No. 14570 - कार्तवीर्यरक्षाबन्दनम्

9. MSS.No. 2230, NNB No. 14526 - कार्तवीर्ययन्त्रः

10. MSS.No. 2235, NNB No. 14531 - धारणार्थकं यन्त्रः

11. MSS.No. 2298, NNB No. 14596 - कार्तवीर्ययन्त्रः

(இந்த எந்திரம் முழுமையாக வரையப்படாததால் இப்பதிப்பில் சேர்க்கப்படவில்லை)

நுண்ணாய்வுக்காகத் தேர்வு செய்யப்பட்டு பாட பேதங்கள் மட்டும் காணப்பட்ட, படியெடுக்கப்பட்ட சுவடிகள்-

1. B. Nos. 8937, 8398, 6877, 6885, 6884, 6882, 6883, 1919, 6878, 6881
2. NNB Nos. 14525, 14526, 14531, 14596, 14591, 14570, 14590, 14589, 14588, 14587, 14586, 14592.

மிகச் சிறிய நூலாக இருப்பினும், வாழ்க்கையில் தினந்தோறும் பயன்படும் நூலாக அமைவதால் மிகுந்த கவனத்துடன் நுண்ணாய்வு செய்து, மந்த்ரங்களிலும் எந்த்ரங்களிலும் தவறு ஏற்படாத வண்ணம் இந்த நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது.

பொதுவாகக் காணாமல் போன பொருட்களையும், மனிதர்களையும் கண்டுபிடிக்க உதவும் ஒரு சிறந்த மந்த்ர சாஸ்திர நூலாக இது அமையும் என்பது எமது அனுபவம் உணர்த்தும் உண்மை. முறைப்படிப் பயின்று, பயன்படுத்தினால், மனித குலம் அனைத்துக்கும் நன்மை பயக்கும் நூலாக இது அமையும். நமது நூலகப் பதிப்பான 'பிரபஞ்சசார-சார-சங்கிரகம்' என்னும் நூலின் இரு பாகங்களிலும் காணப்படும் பெரும்பாலான மந்த்ரங்கள் அனைத்துக்கும், இந்த நூலில்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

(கார்த்தவீர்யார்ஜுன உபாசனை) காணப்படுவது போன்று விளக்கங்கள் நமது நூலகச் சுவடிகளில் காணக்கிடைக்கின்றன.

எதிர்வரும் காலங்களில் இவை வெளியிடப்பட்டால், மனித குலம், துன்பம் நீங்கி, நேர்மையுடனும், புகழுடனும், மகிழ்வுடனும் மன- உறுதியுனும், வாழ இயலும் என்பதில் ஐயம் ஏதும் இல்லை.

இந்தச் சுவடிகளை நுண்ணாய்வு செய்து பதிப்பிக்க அனுமதியளித்த சரசுவதி மகால் நூலக இயக்குனர் பெருமதிப்பிற்குரிய உயர்திரு கா. பாஸ்கரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், இந்நூல் நல்ல முறையில் வெளிவரத் துணை நின்ற மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் நூலக இயக்குனர் டாக்டர் என். சுப்பையன், இ.ஆ.ப. அவர்களுக்கும், இந்நூலகத்தின் நிருவாக அலுவலர் திரு. கி. கணேசன்,B.Com., அவர்களுக்கும், சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியராகிய எனக்கு இந்த நூலை நமது நூலகத்தின் வாயிலாக வெளியிட அனுமதித்த தேசியக் கல்லூரிச் செயலர் திரு. K. ரகுநாதன் அவர்களுக்கும் கல்லூரி முதல்வர் முனைவர் K. அன்பரசு அவர்களுக்கும் நான் நன்றியைக் காணிக்கை யாக்குகிறேன்.

இந்த நூலகத்தில் பணிபுரிந்த காலஞ்சென்ற சமஸ்கிருத பண்டிதர் எங்கள் ஆசான் திரு. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் இந்த நூலின் மாண்பைப் பற்றி அடிக்கடிக் கூறியுள்ளார். இதனை எடுத்துக் கையாளும்போதுதான் இந்த நூலின் மேன்மையைப் பற்றி ஓரளவு புரிந்துகொள்ள முடிகிறது.

நுண்ணாய்வின்போது எழுந்த ஐயப்பாடுகளைத் திறம்பட விளக்கிய இந்த நூலகத்தின் மூத்த சமஸ்கிருதப் பண்டிதர் முனைவர் ஆ. வீரராகவன் அவர்களுக்கு எங்களது எண்ணற்ற நன்றி கலந்த வணக்கங்களை தெரிவித்துக்கொள்கிறோம். கார்த்தவீர்யார்ஜுனனைப் பற்றித் தமிழ் நூல்களில் காணப்படும்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

செய்திகளை எமக்கு அடையாளம் காட்டிய நமது நூலகத் தமிழ்ப் பண்டிதர் திரு. மணி.மாறன் அவர்களுக்கு எண்ணற்ற நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்தத் தலைப்பை பதிப்பிக்கக் கோரிக்கை விடுத்தவுடன், அதற்கான அனுமதி பெறுவதற்கு அனைத்து உதவிகளும் செய்து, தாமதம் ஏற்பட்டபோது அதனை விரைவுபடுத்தி உதவி புரிந்த நமது நூலகத்தின் நூலகர், முனைவர் எஸ். சுதர்ஷன், M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கு எங்களது சிரம் தாழ்ந்த, நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலைத் திறம்பட அச்சிட்டு வழங்கி உள்ள நூலக ஒளி அச்சகப் பிரிவினருக்கும், அச்சுப்பணி மேற்கொண்ட திருமதி பர்வதம் அவர்களுக்கும் எங்களது நன்றிகளை உரித்தாக்குகிறோம்.

தஞ்சாவூர்
22.08.2015

வி. எம். அனந்தநாராயணன்
எல். அனிதா
பதிப்பாசிரியர்கள்.

CC-0.TSarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

# நான்முகம்

புராணங்கள் 18 வகைப்படும். இதனை பிங்கலந்தையின்

மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பதுமம்,
வைணவம், பாகவதம், பிரமம், சைவம், இலிங்கம்,
பௌடியம், நாரதீயம், காருடம் பிரமகைவர்த்தம்,
காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம்,
பிரமாண்டம் பிற்பாடு பதினெண் புராணமாகும்

என்ற செய்யுளினால் அறியலாம். இவற்றுள் சைவம், காந்தம், லிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பௌடியம், மச்சம், மார்கண்டம், ப்ரமாண்டம் என்னும் பத்தும் சைவர்களால் போற்றப்படுகின்ற சைவ புராணங்களாகும். நாரதீயம், பாகவதம், காருடம், வைணவம் என்னும் நான்கும் வைணவர் களுக்கு உரிய தாகும். ப்ரமம், பதிமம் ஆகிய இரண்டும் பிரமனைப் பற்றி கூறுவதால் பிரம்ம புராணம் எனப்படும். ப்ரம்மவைவர்தம் சூரியனைப் பற்றி கூறுவதால் சூரிய புராணம் எனவும், அக்னியை பற்றி கூறுவதால் அக்னி புராணம் எனவும் வழங்கப் பட்டன. இதனை வேறொரு வகையிலும் பிரிப்பர். காந்தம், ஆக்கிநேயம், சைவம், கூர்மம், மச்சம், இலிங்கம், வாமன புராணம், பிரம்மவைவர்த்தம், இராட்சச புராணம், பாகவதம், வைணவம், பதுமம், வராகம், காருடம், நாரதீயம் இவை சாத்வீக புராணங்கள். அந்த அந்த புராணங்களில் மேல் தோன்றும் குணம் பற்றி இவ்வாறு வகுக்கப் பட்டுள்ளதாகத் தெரிகிறது.

மச்புராணம் வடமொழியில் பதினான்காயிரம் செய்யுட்கள் கொண்டது. வேதவியாசர் இதை இரண்டு பகுதிகளாகப் பாடி யிருக்கிறார். பூர்வகாண்டம் என்ற முதற் பகுதியில் நூற்றுப் பதினான்கு அத்தியாயங்களும், இரண்டாம் பகுதியான உத்தர காண்டத்தில் ஐம்பத்தெட்டு அத்தியாயங்களும் என நூற்றெழு பத்திரண்டு அத்தியாயங்கள் உள்ளன. இதனை திருநெல்வேலி சீமையை ஆண்டுவந்த வடமலையப்ப பிள்ளை அவர்கள் கி.பி. 1706-1707 இல் தமிழில் மொழிபெயர்த்துச் செய்யுள்


CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

வடிவில் பாடியுள்ளார். தமிழ் நூலாகிய மச்சபுராணம் முதல்நூல் போலவே பூர்வகாண்டம், உத்திரகாண்டம் என பெரும் பிரிவுகளையும் முறையே 114, 58 அத்தியாயங் களையுமுடையது. புராணத்தின் தொடக்கத்தில் பாயிரம், நைமி சாரணியச் சிறப்பு, அனுக்கிரக மணியெனவரும் மூன்றும் தமிழ் நூலாசிரியரே செய்தவை. செய்யுட்கள் இனிய ஓசையுடையன, கற்பனையும் பொருட்செறிவும் உடையன.

காசிபர், சூரியன் முதலியோர் மரபும், வசுருத்திரர், சந்திரன், சோமவம்சம், யயாதி புத்திரர், நாரசிங்கர், வயிரவர், தாரகாசுரன், குமாரசுவாமி முதலியோர் உற்பத்தியும், மதனத் துவாதசி, ஆதித்த சயனம், கிருஷ்ணாட்டமி, வீமத்துவாதசி, கலியாண சத்தமி முதலிய சத்தமி பேதங்கள், சிவசதுர்த்தசி, சங்கராந்தி, விபூதித்துவாதசி முதலிய விரத நியமங்களும், சிரார்த்த வகைகளும் அவற்றை கடைப்பிடிக்கும் முறையும், தெய்வயானை, யயாதி, இரணியகசிபு, பிரகலாதன், திரிபுரத்தசுரர், தாரகன் முதலியோருடைய பூரண சரிதமும், போசன், பௌரவன், அக்னி முதலியோர் வம்ச வரலாறும், நவக்கிரகங்கட்குரிய விரத நியமமும், தீர்த்த சிரார்த்தம், சந்திர சூரிய கிரகணதானம், தீர்த்த யாத்திரை, சாந்தி கிரகயஞ்ஞம் முதலியவற்றிற்குரிய விதிகளும், மேரு, இமயம், பாரத ஆண்டு முதலியவற்றின் வருணனைகளும், பரமேசுவர தோத்திரம் முதலிய தோத்திரங்களும், பிற புராணங்களில் வரும் கதைகள் சிலவற்றிற்கான காரணங்கள் பற்றி விவரங் களும் இப்புராணத்தில் கூறப்பட்டுள்ளன.

இதை தொடர்ந்து கார்த்தவீர்யார்ஜுன ன் பற்றிய பாடல் மூலமாக அதில் விளக்கங்கள் காணப்படுகின்றன. தமிழில் கார்த்தவீர்யார்ஜுனன் பற்றி இப்பாடல் மூலம் வெளிப்படுத்தும் அளவிற்கு ஆயிரம் கைகள் கொண்டவன் கார்த்தவீரியன் ஆவான்-

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

## கார்த்தவீரியன்

முனிவர் கேட்ப வருந்தவச் சூதன் யதுகுல மொழிகுவானெதுவின்
றனையர்களில வஞ்சிசிகன் குரோட்டிரகுவொடு சகத்திர சித்தாங்
கனையரை வரிலோர் சகத்திர சித்துச் சதசித்தை யளித்தனனவன்றான்
வனைகழ லயனுத் தரகப னோடேகயன்றனை மனமகிந்துயிதான். 1

ஏகயன் றன்ம நேத்திரற் பெற்றா னன்னவன் குந்தியை யீன்றான்
வாகுறு குந்தி சங்கசற் பயந்தான் சங்கதன் மகிமனற்றந்தான்
பாகுறு கீர்த்தி மகிமனென் பேரன் பத்திர சிரேணியை பயந்தரனாகுறு
மவன்றுத் தமன்றனை யீன்றான் றுத்தமன் ககைனையளித்தான். 2

கனகனே க்ருதவீரியன் கிருதாக்கினி கடுங்கிடுததன் மாவோ
டினைபிகு கிருத சன்னொறு நால்வரின்றனன் கிருதவீரியனே
மனவலிக் கார்த்தவீர்யார்சுனனை வரத்தினி லளித்தன னன்னோன்
றினகரன் போலோர் திகிரியை நடத்திக் கிரைகட லுலகெலாம் புரந்தான். 3

அரியமெய்த் தவஞ்சேர் தத்தரை நோக்கி யையிரண்டாயிரம் வருட
முரிபமா தவஞ்செய் தனவனை வருளா லுயர்கர மாயிர மதன்மம்
புரிகுவோன் றன்னை யறிந்துடன் றெறுதல் பொருமடன் மன்னரைவென்ற
தரும நன்னெறியை நிறுத்துத றன்னி லுயர்ந்தவன் றன்கையாற் சாதல் 4

இவ்வர நான்கும் பெற்றபின் புவனம் யாவையும் வென்றன வினைக்கிற்
செவ்விய கரங்களாயிரம் வரவுந் தேர்கொடி விருதுவந் துறவும்
பவ்வமே ழுடுத்ததீவினும் யாக மொருபதி னாயிரம் புரிந்து
மவ்வகை மகத்தின் வேதிகை யூப மவிரொளிப் பசும் பொனினமைத்தும் 5

வழங்குதக் கனைகளளவிலா தளித்தும் வானவர் வயங்குதந்துமிகண்
முழங்குவா னத்தின் விமானமே லிவர்ந்து மொய்ப்புறு திறலோடு மைந்தான்
றழங்கிசை மகதி யாழ்முனி யாகசாலையில் மன்னவன் சரிதை
பழங்கணித் திசையான் முறைபிற ழாமற் பிரிவொடும் பாடின னென்பான் 6

நாற்றிசையுள்ள நவையெலா மொழித்துச் சக்கர வர்த்தியா நாம
மேற்றுதற் கனைந்தோ ரென்ப தோ டையாயிரவருடத் தொகை யிருந்து
தோற்றிய மழைக்கோ ரிந்திரனாகித் துலங்க செங்கதிரென விளக்கி
யாற்றல்சால் கார்க்கோ டகன்மைந்தர் தமை வென்றருத்துனன்றும் பெயர் 7

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

விளங்கிளர்ந் துயர்ந்த மாயிட மதியா மாநகர் வகுத்தினிதிருந்து
துளங்குதீர்த் திரளோ ராயிரங் கரத்தாற் சொரிமழைக் காலத்தின் மறித்துக்
களங்கயில் வேகத் தெதிர்கொளா நின்று கரைபொரு நருமதையாற்
றினுளங்கனி சிறப்ப மடந்தைய ரோடு முறுபுன லாட்டினி தயர்ந்தான் 8

துலங்குதென் கடலை யாயிரங் கரத்தாற் றுளக்குறக் கலக்க வந்தோயங்
கலங்குறு போழ்திற் பாதலத்தசுரர் கணபன மணிமுடி நாகர்
மலங்கெழு கயல்வான் திமிங்கில முதலாய மலங்கின வானூரில் செயில் சூ
ழிலங்கையிற் புகுந்தவ் விராவணன் நடந்தோ னிறுக்கிமாயிடமதியுய்த்தான் 9

புலத்திய னிரக்க வரக்கனை விடுத்தான் பொருந்திய வாயிரங்கரத்தா
லிலக்குவிற் சிறுநா ணொலிக்கமு தண்ட மிடிபடப் பொடிபடுத்தினாகன்
குலத்தினா பவன்றன் வனத்தினைத் தெகிப்ப வன்னவன் கூறு சாபத்தா
னிலத்தவன் கரத்தை யறுத்திடை குவித்தா னிறைகதிர்ப் பரசுராமன்றான் 10

தன்னிலு முயந்தோன் நன்கையிற் படையாற் றன்னுயிர் மாய்ந்திட வேண்டு
மென்னுமுன் வரத்தாற் பரசுரா மன்னா லிறந்தவனன் கார்த்தவீரியன்றா
னன்னவன் புதல்வர் நூற்றுவரவரிற் சூரசேனன்றிட னுவரக்கன்
பன்னிய சூரன் கிருட்டிணன் செயத்து வசனெனிப் பகர்ந்திடுமைவர் 11

படைக்கலத் தொழிலில் ஞவல்லவரவரிற் செயத்துவ சன்மிகப் பரிவா
யடற்பரி களிறு சேனைதே நடைத்தா யவந்தியாந் திருநக ரமைந்தோர்
குடைத்தனி நிழற்றிக் குலவிய தால சங்கனைக் குமரனென் றளித்தான்
றிடத்திற லன்னோ னூற்றுவர் மைந்தர் சிறப்புறப் பயந்தன னன்றே 12

அரசர்களில் வீதி கோத்திர சங்கி யாதரோ டவந்தியர் போசர்
திவளொளி துண்டி கேரரென் றைந்து பேருறுஞ்செங்குலமைந்து
புவனியிற் றுல சங்கர் தங் குலமே பொருந்தின வீதிகோத்திரன்சே
யுவமையில் செயந்த னவ்வவன் மதலை தூர்ச்செய னொன்னலர்தெருவோன் 13

உரைத்திடு கார்த்தவீரியன் சரிதையுரைப்பவர் கேட்பவ ருணர்வேள்
வரப்பெரும் பொருளுமடைகுவ ரிழந்த வான் பொரு டிரும்பவந்தெய்துந்
திரைக்கடற் புவியிலெதிர்த்தவொன் னலரச் செயிப்பர்மா மகத்தினைச்
செய்து
நிரப்பிய பலனும் பெறுகுவ ரென்றே நெகுந்தவர்க் குரைத்தனன் சூதன் 14

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

பதிப்பு நூலானது ஆயிரம் கைகள் கொண்ட கார்த்தவீரியனைப் பற்றியது. புராணங்களில் காணப்படும் இந்நூல் வரலாறு மன்னனுக்கு நீலன், அஞ்சிகன், குரோஷ்டீ, ரகு, சகஸ்ரஜித் என்ற ஐந்து பிள்ளைகள் பிறந்தனர். இந்த ஐவரில் சகஸரஜித் என்பவனுக்கு மகனாக பிறந்தவன் சதஜித் ஆவான். இவனுக்கு மூன்று பிள்ளைகள் பிறந்தனர்கள். அதில் அயன், உத்தரகயன், கேகயன் என்றுஅழைக்கப்பட்டனர். கேகயனுக்கு பிள்ளையாக தருமேந்திரன் பிறந்தான். அத்தருமன் என்பவனுக்கு குந்தி என்பவன் பிறந்தான். குந்தியின் மகனாக சங்கதகன் பிறந்தான். சங்கதனின் மகனாக தோன்றியது மகிமன். மகிமனுக்கு பத்திரசிரேணி என்னும் மகன் பிறந்தான். பத்திரசிரேணிக்கு உத்தமன் என்பவன் மகனாக பிறந்தான். உத்தமன் மகன் கனகன் என்பவனாவான். கனகனுக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தனர் முறையே கிருதவீரியன், கிருதாக்கினி, கிருதன் தர்மா, கிருதர்ஸன் என்ற பெயர் கொண்டு அழைக்கப் பட்டனர். இவர்களுள் பகவானுடன் அருளால் கிருதவீரியனுக்கு மகனாக பிறந்தான் கார்த்தவீர்யார்சுனன் ஆவான்.

பத்தாயிரம் வருடங்கள் தவம் இயற்றி தத்தாத்ரேயனை வழிபட்டு அவர் அருளால் நான்கு வரங்களை பெற்றவன் கார்த்தவீர்யார்சுனன் ஆவான். அதர்மம் செய்வோரைத் தானே அறிதல், சென்று அவரைத் தண்டித்தல், தரும வழியில் செல்லாத மன்னருடன் போரிட்டு அவரை வெல்லுதல், தன்னைவிட உயர்ந்தவன் கையால் மரணம் ஆகிய நான்கு வரங்களையும் பெற்று இப்பூ மண்டலத்தை சூரியன் போல பிரகாசத்துடன் பரிபாலித்து வந்தான்.

கார்த்தவீர்யார்சுனன் எண்பத்தைந்தாயிரம் வருடம் ஆட்சி செய்தான். கார்க்கோடகன் மைந்தருடன் போரிட்டு அவர்களை வெற்றிபெற்று அர்ச்சுனன் என்ற பெயரையும் பெற்றான்.

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

ஒரு சமயம் நர்மதை ஆற்றின் குறுக்கே தன் ஆயிரம் கரங்களால் நீரைத் தேக்கி அதிலே மனைவியருடன் மகிழ்ந்து நீராடிக் கொண்டிருந்தான். அப்போது சிவபூஜை செய்ய வந்த இராவணன் ஆற்றிலே நீர் ஓட்டம் இல்லாததால் மணலிலே அமர்ந்து பூசை செய்து கொண்டிருந்தான். நீராடி முடிந்ததும் கரையேற விரும்பிய கார்த்தவீர்யார்ச்சுனன் தன் கரங்களால் தேக்கியிருந்த நீரை ஓடவிட்டான். பெருவெள்ளம் போன்று ஓடிய நீர் ஆற்றின் நடுவே சிவபூஜை செய்து கொண்டிருந்த இராவணனையும் பூசைக்காக பிரதிஷ்டை செய்திருந்த மணல் லிங்கத்தையும் அடித்துத் கொண்டு சென்றது.

பூஜை தடையுற்றது கண்டு இராவணன் மிகுந்த கோபம் கொண்டவனாய் இதற்கு காரணம் ஆனவன் யார் என அறிய முற்பட்டான். கார்த்தவீரியனே இதற்கு காரணம் என அறிந்து அவனுடன் போரிட முனைந்தான். ஆனால் மிகவும் பலசாலியான கார்த்தவீரியனை இராவணனால் வெற்றி கொள்ள இயலவில்லை. அவனுடன் தோல்வியுற்று சிறை பிடிக்கப்பட்டான் பின்னர் இராவணனின் தந்தை புலஸ்தியர், கார்த்தவீர்யனை வேண்டிக்கொண்டதன் விளைவாக இராவணனை விடுதலை செய்தான்.

சூரியன் அந்தணர்களிடம் கேட்டுக்கொண்டு கார்த்தவீரியனிடம் வந்து ''தேஹி'' என்று பிச்சை கேட்டான். கார்த்தவீரியன் என்ன வேண்டுமென கேட்டால் தருகின்றோம் என்கிறான். அதற்கு சூரியன், ''ஐயனே பசி அதிகமாக இருக்கிறது. இந்த காட்டை பொசுக்கி என் பசியை தீருங்கள்'' என்றான். உடனே கார்த்தவீரியன் ஆயிரம் கரங்களால் பாணங் களை வர்ஷித்து காட்டை பொசுக்கினான்.

அக்காட்டில் ஏற்பட்ட பெருந்தீயால் அங்கு தவம் இயற்றிக் கொண்டிருந்த பார்கவர் என்ற முனிவரின் ஆசிரமம் எரிந்து சாம்பலானது. இதனால் கடுங்கோபமுற்ற முனிவர் கார்த்தவீரியனின் ஆயிரம் கரங்கள் அறுந்துவிடவேண்டும் என சாபமிட்டார்.

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

இந்த சாபத்தால் பரசுராமனுடன் ஏற்பட்ட போரில் கார்த்தவீர்யார்சுனன் வெட்டப்பட்டான். தன்னை விட உயர்ந்த பரசுராமனால் கொல்லப்பட்டான். கார்த்தவீர்யார்ச்சுனனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தன. அவர் களில் சூரசேனன், திருடவக்ரகன், சூரன், கிருஷ்ணன், ஜயத்துவஜன் ஆகிய ஐவரும் வீரத்தில் சிறந்தவர்களாக விளங்கினார்கள். ஜயத்துவஜனுக்கு தாலசங்கன் என்ற பிள்ளை பிறந்தான். அவனே அவந்தி நகரை உருவாக்கியவன்.

தாலசங்கனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள் அவர்களில் விதிகோத்திரன், சங்கியாதன், அவந்தி, போசன், துண்டிகேரன் என்று ஐந்து பேரும் முறையே வீதிகோத்திரர், சங்கியாதர், அவந்தியர், போசர், துண்டிகேரர் என்ற ஐந்து வம்சங்களைத் தோற்றுவித்தார்கள். வீதிகோத்திரனுடைய மகன் ஜயந்தன் என்பவன் ஆவான். அஜ்ஜயந்தனுக்கு துர்ஜயன் என்பவன் மகனாக பிறந்தான்.

மேலே கூறப்பட்டுள்ள செய்தியானது கார்த்வீர்யார்ச்சுன னுடைய பாரம்பரியத்தையும் அவனது பல்வேறு சிறப்பு களையும் கூறும் கதையின் சுருக்கமாகும்.

## நூல் தலைப்பு

கார்த்தவீர்யார்ஜுனனை வழிபாட்டு தெய்வமாக்கி வழிபடுவதற்கான வழிமுறைகள் அவற்றை தொகுத்து இந்த நூலில் வெளியிடுவதற்கான முதல் முயற்சியாக நமது சரசுவதிமகால் நூலகத்தில் கிடைக்கப்பெறும் ஓலைச் சுவடிகள் மற்றும் காகிதச் சுவடிகளைக் கொண்டு இந்நூல் தொகுக்கப்பெற்றுள்ளது. அவற்றுள் 21 தலைப்புகள் தேர்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. அதில் மொத்தம் 10 தலைப்புகள் (பத்து மட்டும் தேர்வு செய்து அவற்றின் பயன்கள் பற்றிய விளக்கம் சுவடிகளில் இந்த தலைப்புகள் அடங்கி உள்ளன.

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

நமது நூலகம் வாயிலாகவும் மற்ற பதிப்புகள் வாயிலாகவும் வெளிவந்துள்ள கார்த்தவீர்யார்ஜுனன் பற்றிய தலைப்புகள் மிகச் சொற்பமே. ப்ரபஞ்சசாரசாரசங்கிரகம் என்ற நமது நூலகப் பதிப்பில் ஒரு சில மந்திரங்கள் காணப் பட்டாலும் அவை மேற்குறிப்பிட்ட தலைப்பின் கீழ் காணப்படும் தொகுதியில் உள்ள தனிப்பட்ட ஏடுகளாக இருக்கின்றன.

தற்போது இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ள மந்திரங் களில் அவை இடம்பெறவில்லை. எனவே இந்த நூலில் காணப்படும் மந்திரங்கள், எந்திரங்கள், (படங்கள்) இதுவரை வெளிவராத தலைப்புகளாகவே காணப்படுகின்றன.

கார்த்தவீர்யார்ஜுனன் என்று அழைக்கப்பெறும் ஹேஹய வம்சத்து அரசர் என்று அழைக்கப்பெறும் ஹேஹயர்களும் பார்க்கவர்களும் ஒரே காலகட்டத்தில் வாழ்ந்தவர்கள். முன்னர் அரசர் குலம், பின்னவர் அந்தணர்கள் ஹேஹயர்கள். இயல்பாக பார்கவர்களுக்கு செல்வத்தை வாரி வழங்கியவர்கள். ஆனால் செல்வம் குறைந்த போது பார்கவர் களிடம் சென்று தங்களுடைய ஏழ்மையை தீர்க்குமாறு கேட்ட போது பார்க்கவர்கள் மறுத்துவிட்டனர். இதனால் சினம்பெற்ற ஹேகையர்கள் அவர்களை துன்புறுத்த முற்பட்டனர். இதனால் துயருற்ற பார்க்கவர்கள் தங்களுடைய செல்வங் களை தரையில் குழிதோண்டிப் புதைத்துவிட்டு புதையல் இருக்கும் இடங்களைத் தகுந்த குறியீடுகளால் நினைவில் நிறுத்தி அங்கிருந்து சென்றுவிட்டனர். ஔர்வா என்ற ஒரு மகன் பார்கவ குலத்தில் தோன்றிய பின்னர் தான் ஹேஹயர்கள் சற்று அமைதி அடைந்தனர். பல ஆண்டுகள் கழித்துத்தான் க்ருதவீரியன் என்ற அரசனுக்கு கார்த்தவீரியன் என்ற மகன் தோன்றுகிறான். அதைப்போல ஜமதக்னி என்பார் பார்க்கவ குலத்தில் தோன்றுகிறார். இவ்விருவரும் தொடக்க முதலே தங்கள் வம்ச எதிரியை மனதில் கொண்டு

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

பழிவாங்க எண்ணுகின்றனர். நர்மதை நதிக்கரையில் காணப்பெறும் மாஹிஷ்மதி (தற்போதைய மத்தியபிர தேசத்தில் காணப்படும் கர்ஹாவன் மாவட்டத்தில் உள்ள மகேஷ்வர் என்ற நகரம்) என்ற ஊரை தலைநகராகக்கொண்டு கார்த்தவீர்யார்ஜுனன் ஆண்டு வரும்போது ஒரு நாள் நாரதர் அங்கு வருகிறார். வீடுபேறு அடைவதற்கு என்ன வழிமுறை களைக் கடைபிடிக்க வேண்டும் என்று கார்த்தவீர்யார்ஜுனன் நாரதரைக் கேட்டுக்கொள்கிறான்.

பத்ர தீப ப்ரதிஷ்டை என்ற ஒரு விளக்கேற்றும் முறையைக் கூறுகிறார். இம்மையிலும் மறுமையிலும் ஒருசேர இன்புறுவதற்கு இதனால் வழி ஏற்படும் என்று அருளுகிறார். அந்த நோன்பைக் கடைப்பிடித்து முடித்த பின்னர் கார்த்தவீர்யார்சுனனுக்கு ஆசான் தத்தாத்ரேயர் பல வரங்களை வழங்குகிறார். அவன் ஆயிரம் கரங்கள் கொண்ட வனாக இருப்பான் என்பதும் ஒரு வரமாக ஆகிறது.

கார்த்தவீர்யார்ஜுனனைப் பற்றிய நிகழ்ச்சிகள் மகாபாரதம் ஆனுசாசன பருவத்திலும், வன பருவத்திலும், ராமாயணம் உத்தர காண்டத்திலும், இவை தவிர ப்ரமாண்ட புராணத்திலும் காணப்படுகின்றன. இவற்றுள் கார்த்தவீர்யார் ஜுனனைப் போற்றக்கூடிய செய்யுட்கள் இடம் பெற்றிருந் தாலும் திருமாலிடம் இருந்து தோன்றிய வம்சத்தில் உதித்த கார்த்தவீர்யார்சுனனை இறைவனின் அம்சமாகக் கொண்டு காணப்படும் மந்திரங்கள், மந்திர சாஸ்திரங்களில் மட்டுமே கிடைக்கின்றன.

காணாமல்போன, கைவிட்டுப்போன, கிடைக்க வேண்டிய, கிடைப்பதற்கு அரிய பொருட்கள் திரும்ப கிடைப்பதற்கு கார்த்தவீர்ய மந்திர உபாசனம் மிகச் சிறந்தது. இந்த தொகுப்பாசிரியரின் அனுபவ பூர்வமான நிகழ்வுகளை நோக்கும் போது பொது மக்களுக்கு முறைப்படி பயன்பட்டால் வாழ்க்கை இனிதாக இருக்கும் என்பதை


CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

மனதில் கொண்டு இதில் காணப்படும் மந்த்ரங்கள், எந்திரங்கள் ஆகியவை அச்சில் கொண்டுவரப்படுகின்றன.

இதில் காணப்பெறும் மந்திரங்களையும் எந்திரங்களையும் ஒரு தகுந்த ஆசிரியர் வாயிலாக உபதேசம் பெற்று பயன்படுத்த வேண்டும் என்பது விதி. அப்படி செய்ய இயலாதவர்கள் சிவாலயங்களில் காணப்படும் தட்சிணாமூர்த்தியின் முன்பு இந்த நூலை வைத்து முறைப்படி வணங்கி பின்னர் உச்சரிப்புகள் மாறாமல் மிக கவனமுடன் அதில் குறிப்பிட்டுள்ள ஆவாஹனம் முதலான செயல்களைச் செய்து மந்திரங்களை உருவேற்றினால் இவை நிச்சயமாக பயனைத் தரும்.

பொருள் காணாமல் போன உடனேயே அந்த நேரத்தை சோதிடம் முறைப்படி சரியாக கணக்கிட்டு இதன் உபாசனையைத் தொடங்குவது நலம். இந்த மந்திரங்களையும், எந்திரங்களையும், அஸ்திரங்களையும் முன்னமே அறிந்து இருப்பதன் மூலம் தகுந்த நேரத்தில் அவற்றை நாமே பயன்படுத்த இயலும். பரிட்சை செய்து பார்க்கும் விதமாக பயன்டுத்தினால் பயனற்று போய்விடும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நேர்மையாக சம்பாதித்த பொருட்கள் மட்டுமே இவைகளால் திரும்பப் பெற இயலும். காணாமல் போன பொருட்கள் தற்போது இருக்கும் இடத்தையும் யார் இதனை எடுத்து இருக்கக்கூடும், யார் வசம் அந்த பொருள் தற்போது இருக்கிறது என்பதனையும் இந்த உபாசனை வாயிலாக உணர முடியும். எனவே மேற்கூறியவற்றை மனத் தூய்மையுடன் இந்த நூலில் கூறப்பட்டுள்ள உபாசனைகளை செய்வது நலம் பயக்கும். நன்மை அளிக்க கூடியதாக அமையும். இருபத்தொன்று (21) வகையான மந்திரங்களும், யந்திரங்களும், துதிகளும், அஸ்திரங்களும் வெவ்வேறு வகையாக இருந்தாலும் அவற்றின் முடிவு தொலைந்து போன பொருளைக் கண்டறிவதுதான். இவைத் தவிர

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

மனத்தளவிலான துன்பங்களையும் நேர்மையான கோரிக்கைகளையும் நிறைவேற்ற வல்லவைகளான இந்த மந்த்ரங்கள் நமக்கு உதவுகின்றன.

## கார்த்தவீர்யார்ஜுனமந்த்ர: (B. 8937)

ஒவ்வொரு மந்திரத்தின் துவக்கத்தில் அந்த மந்திரத்தின் தேவதை அது போற்றப்படும் மந்திரத்தின் யாப்பு அந்த மந்திரம் எந்த முனிவருக்கு வெளிப்பட்டது போன்ற தகவல்கள் இடம்பெற்று இருக்கின்றன. இவை மூன்றையும் கூறி, முறையே நெற்றி, மூக்கின் நுனி, மார்பு ஆகியவற்றை வலது கை விரல்களால் தொடவேண்டும். பின்னர் பீஜம் என்று முடியும் சொற்றொடரால் வலது மார்பையும் சக்தி: என்று முடியும் கீலகம் என்று முடியும் சொற்றொடரால் மார்பை வலது விரல்களால் தொட வேண்டும். உடலின் வலப்பகுதியை ஆணாகவும், இடப்பகுதியைப் பெண்ணாகவும், நடுப்பகுதியை இவை இரண்டும் சேர்ந்து கட்டப்பட்ட சிவனும் சக்தியும் இணைந்த ஓர் உருவமாகவும் கொள்ளவேண்டும். இவ்வாறு இறை தந்மையை நம்முள் கொண்டுவந்து நிறுத்தி ஒரு குறிப்பிட்ட தேவதையை வணங்குவது, அந்த பெயர்களைத் திரும்ப திரும்ப மனதிற்குள் உச்சரிப்பது ஜபம் எனப்படும். இது இன்னும் முடியவில்லை. உடலின் முக்கிய அங்கங்களான நரம்புகள் முடிவுபெறும் ஐந்து விரல்களும் பஞ்ச பூதங்களாக கொள்ளப் படுகின்றன. கட்டைவிரல் பூமியாகவும், சுண்டுவிரல் ஆகாய மாகவும், ஆள்காட்டி விரல் காற்றாகவும், நடுவிரல் நெருப் பாகவும், மோதிரவிரல் நீராகவும் கொள்ளப்படுகின்றன. இந்த விரல்களை பூமியின் உருவமாக இருக்கும் கட்டை விரலால் கீழிருந்து மேலாக தொடும்போது (விரலின் அடியில் இருந்து விரலின் நுனிவரை) ஐந்து பூதங்களும் நிலைநிறுத்தப் படுகின்றன. அதனால் மனம் ஒன்றுபடுகிறது. இவை ஐந்தும்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

சேர்ந்து ஒன்றுபட்ட அமைப்பே கைகூப்பி வணங்கும் முறையாகும். இதனையே ''கரந்யாஸம்'' என்று அழைக்கிறோம். ஒவ்வொரு மந்திரத்தின் தொடக்கத்தில் அமையும்.

இதேபோல உடம்பின் முக்கிய அங்கங்களான இதயம், உச்சந்தலை, பின்னங்கழுத்துப் பகுதி, மார்பு, நடு நெற்றியோடு சேர்ந்த கண்கள் (மூன்று கண்கள்) உடலிலிருந்து வெளிப்படும் ஆற்றல் இவை அனைத்தையும் ஒருமுகப் படுத்தி ஒன்றாக கட்டி நான்கு திசைகளிலும் அசையாமல் செய்த பின்னர் வணங்குதலுக்குரிய தேவதையை தியானம் செய்ய வேண்டும். உடலும் மனமும் ஒன்றுபடும்போது கவனம் சிதறாமல் இருக்க வேண்டும் என்பதால் இப்படிப் பட்ட கட்டை நமக்கு நாமே கட்டிக்கொள்ளவேண்டும். அது வெளிப்படையான கயிற்றுகட்டாக இல்லாமல் மனதால் கட்டப்படும் மந்திரக்கட்டு ஆகும். பின்னர் நம்முடைய விருப்பத்தை அறத்தை மீறாத வேண்டுதலை இறைவனைக் குறித்து செலுத்துவதே மந்திரங்களின் நோக்கம் ஆகும்.

பெரும்பாலான மந்திர உபதேசங்கள் கேள்வி பதிலாகவே அமைந்திருக்கின்றன. பார்வதி தேவிக்கு சிவபெருமான் உபதேசிப்பதாகவும், ஒரு முனிவர் கேட்க மற்றொரு முனிவர் உபதேசிப்பதாகவும் இந்திரன் முதலான தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் உபதேசிப்பதாகவும் இவை அமைந் துள்ளன. எந்த ஒரு மந்திரமும் உபாசனையும் தகுந்தவர்களுக்குத்தான் வழங்கப்படவேண்டும் என்பது விதி. எனவே மந்திரங்கள் எவரை சென்று அடைவாராயின் அவர்கள் தவறான வழியில் பயன்படுத்திவிடக்கூடாதவாறு என்பதற்காக அவருடைய தன்மைகள் நன்கு பரிசோதிக்கப் பட்ட பின்னரே அவை வழங்கப்படுகின்றன. ஆகவேதான் ஒரு மந்திரத்தை பெறுவதற்கு ஒருவர் பலகாலம் குருவிடமோ அல்லது இறைத்தன்மை உடையவரிடமோ இறைஞ்ச வேண்டியுள்ளது.

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

இராமனின் தன்மையை முன்பே அறிந்த விசுவாமித்திரர் இராமன் கேட்காமலேயே அவனுக்கு பலவிதமான அஸ்திரங்களை உபதேசித்தார். அது உலக நன்மைக்காக. அதே விசுவாமித்திரர், தான் பிரம்மரிஷி ஆக வேண்டும் என்று முன்பு தவம் இயற்றியபோது இன்னல் களும், இடையூறுகளும் ஏற்றுள்ளார். தனக்காக வேண்டி செய்யும்போது அந்த இலக்கை அடைவது மிக கடினம். உலகின் நன்மைக்காக வேண்டி செய்யும்போது அந்த இலக்கு எளிது. அதனால்தான் வேள்விகளும் பிரார்த்தனைகளும் பொது நன்மையை விரும்பியே செய்யப்படுகின்றன. தனிப் பட்ட மனிதரின் வேண்டுகோள் என்பது அறம் சார்ந்திருந்து முறையான நீதி கிடைக்காமல் இருந்தால் இறைவனிடம் முறையிடுவதற்காக ஏற்பட்டவை இந்த குறிப்பிட்ட மந்திரங்கள் அன்றாட வாழ்வில் நிகழும் அநீதிகள், அக்கிரமங்கள், கொலை, திருட்டு போன்ற நிகழ்வுகள் தவறு இழைக்காத தனி மனிதனைப் பாதிக்கும்போது வேறு எந்த வழியும் தெரியாத பாமரன் அடைவது இறைவனைத்தான். நமது ''ஸனாதனதரும'' கோட்பாட்டில் இறைவனின் பல்வேறு அம்சங்களை பல்வேறு தேவதைகளாக பிரித்து அந்த அந்த தேவைக்கு ஏற்ப அந்த அந்த தேவதைகளை வழிபடுவது மரபாகிறது. விரலை அசைக்க வேண்டும் என்றால் உடல் முழு வதையும் அசைக்க தேவையில்லை என்பது போல குறிப் பிட்ட செயலுக்கு அந்த தேவையை நிறைவேற்றும் தேவதையை வழிபடுவது போதும் என ஏற்றுக்கொள்ளப் பட்டடுள்ளது.

திருடனைப் படைத்ததும் இறைவன், திருட கொடுப்பவனை படைத்ததும் இறைவன். தண்டிப்பவனை படைத்தவனும் இறைவன். தண்டனைய பெற வைப்பவனும் இறைவன், விடுதலையும் இறைவன், என்ற உயர்ந்த தத்துவக்

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

கோட்பாடு எல்லாம் மனதில் தோன்றாது. என்னைப் பொறுத்த வரையில் நான் மட்டிலும் நேர்மையானவன் என்ற உணர்வு மேலோங்கி நிற்கும் என்பதால் பாதிக்கப்பட்டவர் மன நிம்மதி அடைய இறைவழிபாடு இன்றியமையாத தாகிறது.

இப்போது எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் சுவடிகள் இந்நிலையை மனதில் கொண்டு தொகுக்கப்பட்டவையாகும்.

பார்வதி தேவிக்கும் சிவபெருமானுக்கும் இடையே நடை பெறும் உரையாடலை பார்வதிதேவியின் வேண்டுகோளுக்கு இணங்க சிவபெருமான் கார்த்தவீர்யார்ஜுன மகாமந்திரத்தை பார்வதிக்கு உபதேசம் செய்கிறார்.

கார்த்தவீர்யார்ஜுனனின் உருவ அமைப்பை சிவபெருமான் கூறுகிறார். ஆயிரம் சூரியனின் ஒளி பொருந்திய கோடிக்கணக்கான ரத்தின குவியல்களின் இடையில் அமர்ந்திருப்பவரும் ஒளி வீசி பறக்கும் கொடியைக் கொண்டவரும் உயர்ந்த வெண்கொற்றக்கொடையை கொண்டவரும் அழகான ஒலி எழுப்பும் மணிகள் பொருந்திய சாமரங்களால் வீசப்படுபவரும் வலிமை பொருந்திய வீரர்களிடையே எல்லா அணிகலன்கள் அணிந்து பலவிதமான ஆயுதங்களையும் தரித்த ஆயிரக்கணக்கான தோள்களைக் கொண்டவரும், எப்பொழுதும் முனைப்புடன் காணப்பட்டு போருக்கு செல்ல ஆயத்தமாக கவசங்களை அணிந்து தனது வில்லின் நாணொலியால் இவ்வுலகை அதிர வைக்கும், எல்லா எதிரிகளையும் அழிக்கும் வல்லமை கொண்டவரும், பிணிகளையும், துயர்களையும் நீக்கி செல்வங்களையும் மன நிறைவையும் வழங்குபவரும், அரசர்களுக்கு முதலானவரும், தனது தோள் வலிமையால் உலகில் உள்ள அனைத்து

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

செல்வங்களுக்கும் தலைவராக விளங்குபவராகவும் கார்த்தவீர்யார்ஜுனனை வணங்கி, நமது பல்வேறு உடல் உறுப்புக்களைக் காக்கும் போற்றுதல்களைக் கூறவேண்டும் என்று தொடங்கி எட்டு திசைகள், ஆகாயம், பூமி இவை எவற்றில் இருந்து தனக்கு தீங்கு நேரக்கூடாது என்று வேண்டிக்கொண்டு தலை, நெற்றி, முகம், காதுகள், புருவங்கள், மூக்கு, பற்கள், உதடுகள், நாக்கு, தோள்கள், கைகள், இதயம், வயிறு, தொப்புள், இடை, விலாப் பக்கங்கள், தொடைகள், கால்கள், முழங்கால்கள், பின்புறம் உட்பட்ட எல்லா அங்கங்களையும் பத்து அடிப்படை எழுத் துக்களால் போற்றப்படும் கார்த்தவீர்யார்ஜுனன் நம்மை காப்பாற்றட்டும் என்று பிரார்த்தனை செய்தபிறகு நமது கோ ரிக்கைகளை முன் வைக்க வேண்டும். அசையும் பொருட்கள் அசையா பொருட்கள், ஓர் அறிவு முதல் ஆறு அறிவு வரை உள்ள உயிரினங்கள் தீங்கு செய்யும் விலங்கினங்கள் கண் ணுக்கு விளங்கும் பொருட்கள், கண்ணுக்கு விளங்காத தீமை செய்யும் பிசாசங்கள், ஐந்து பூதங்களில் இருந்து தோன்றும் இவையாவும் தீங்கு செய்யாமல் இருக்க வேண்டுதல் விடுக்கப்பட்டுள்ளது. அச்சத்தின் காரணமாக ஏற்படும் பகைமை பொறாமையின் காரணமாக ஏற்படும் பகைமை, இயலாமையின் காரணமாக பகைமை, இவை யாவும் கார்த்தவீர்யனின் அருளால் விலகி செல்ல வேண்டும் என்று வேண்டப்படுகிறது.

இயற்கையினால் ஏற்படும் துன்பங்களும், மனிதனால் ஏற்படும் துன்பங்களும் நாமாக ஏற்படும் துன்பங்களும் விலக வேண்டும், என்றும் வேண்டப்படுகிறது. பின்னர் கார்த்தவீர்யனின் புகழ்பாடி இப்படிப்பட்ட அவர் நமக்கு எல்லாவற்றையும் வழங்கி காக்க வேண்டும் என்று முடிவு பெறுகிறது.

CC-0TSarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

எல்லா மந்திரங்களும் தனிப்பட்டவரால் பிறருக்கு தெரியாதவாறு பெருமுயற்சி எடுத்து பாதுகாக்கப்பட வேண்டும். தீயவர் கையில் இம்மந்திரங்கள் சிக்கிவிடக் கூடாது என்ற எச்சரிக்கையில் சிவபெருமான் பார்வதிக்கு இந்த உபதேசம் கூறி முடிக்கிறார். இந்த பகுதி 167 செய்யுட்களில் இங்கு வெளிவந்துள்ளது.

## கார்த்தவீர்யமாலாமந்த்ர:

கார்த்தவீர்யார்ஜுனமாலாமந்திர: என்பது முன்பு கூறியது போலவே உடலையும் அங்கங்களையும் கட்டிய பின்னர் மனதால் ஜபிக்க வேண்டியது.

ஆயிரக்கணக்கான கவசங்களை அணிந்து ஆயிரக்கணக்கான கரங்களைக்கொண்டு எல்லா தீயவர்களையும் பழிக்கும் கார்த்தவீரியனை வணங்குகிறேன் என்று தொடங்கும் தியானத்துடன் இந்த மாலா மந்திரம் திருடர் கூட்டத்தை உன் கைகளால் தடுத்துவிடு, ஒளிரும் ஆயிரக்கணக்கான கயிறுகளால் கட்டிவிடு, ஆயிரக்கணக்கான அங்குசங்களால் கட்டுப்படுத்தி உனது வில்லில் இருந்து வெளிப்படும் ஆயிரக்கணக்கான அம்புகளால் உடைதத்தெறி, வலது கையில் கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான வாள்களால் வெட்டி எறி, ஆயிரக்கணக்கான கதைகளால் நசுக்கு, உன்னுடைய சங்கின் ஆயிரக்கணக்கான ஒலிகளால் பயமுறுத்து, கையில் கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான கூர்மையான சக்கரங்களால் பொடிப்பொடியாக்கு, விரட்டு, கர்ச்சனை செய், கட்டுப்படுத்து. மயக்கு, கொல், துடிக்க வை,

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

தவிக்கவிடு, கிழித்துப்போடு, நிறுத்து, கூச்சலிடு, உன் வயப்படுத்து, தூக்கி எறி, என்றெல்லாம் பலவிதமாக தனது எதிரிகளை அழிக்க, கார்த்தவீர்யார்ஜுனனை வேண்டுவதாக இந்த மாலா மந்திரம் அமைந்துள்ளது.

ஒன்றன்பின் ஒன்றாக பூக்களைப் போல கோரிக்கைகளை அடுக்கி மாலை போலத் தொடுத்து வேண்டுதல் செய்வதால் இது அந்த அமைப்பை ஒட்டி, மாலா மந்திரம் என்பது அழைக்கப்படுகிறது.

**கார்த்தவீர்யமந்த்ர:**

கார்த்தவீர்யார்ஜுன மந்திரம் என்ற அதே தலைப்பில் மற்றொரு சுவடி "அங்க நியாஸம்" "கரந்நியாசம்" ஆகியவைகளுக்கு பின்னர் உலகினுடைய பல்வேறு பாகங்களில் அந்த மந்திரத்திற்கான பீஜங்களை நிறுவகித்த பின்னர் கூறப்படும் ஆறு செய்யுட்களின் வாயிலாக கார்த்தவீர்யனின் புகழைப் பாடுகிறது. முன் கூறப்படாத மாலா மந்திரம் இது என்பதை நியாஸங்களுடன் அறிய முடிகிறது. திருடர் கூட்டங்களிலிருந்து காப்பாற்று, கயிறுகளால் கட்டி, கைகளால் தடுத்து, அங்குசங்களால் கட்டுப்படுத்தி அம்புகளால் உடைத்து, ஆயிரக்கணக்கான கத்திகளால் துண்டு துண்டாக வெட்டி, கதைகளாய் அழுத்தி, எதிரிகளை நாசம் செய்து நண்பர்களை வசப்படுத்தி வேண்டாதவர்களை விரட்டி, நமக்கு நன்மை செய்வதாக இந்த மந்திரம் அமைக்கப்பட்டுள்ளது.

**விம்சதி அக்ஷர:**

இந்தப் பகுதியில் ஒரு மரப் பலகையின் மீது வரைந்து பீஜ அக்ஷரங்களை எழுதி துதிக்க வேண்டிய துர்க்கா மந்திரமும் அதனை ஒட்டி அமைந்த 20 அக்ஷரங்களாகிய


CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

மந்திரமும் அதனை ஒட்டி அமைந்த 20 அக்ஷரங்களாகிய கார்த்தவீர்ய விம்சதி அக்ஷர மந்திரம் கூறப்பட்டுள்ளன. முதலில் பலகை மீது துர்க்கா தேவியை ஆவாஹனம் செய்து பின்னர் வரிசையாக க்ஷேத்ரபாலன், வாஸ்துபுருஷன், ருத்திரன் போன்ற தேவதைகளையும், அஷ்டதிக்பாலர் களையும் ஆவாஹனம் செய்து வணங்கி குறிப்பிட்ட மலர்களைத் தூவி, அஞ்சலி செய்து, ஆவாகனம் முதலான முத்திரைகளைக் காண்பித்து, பின்னர் 20 அக்ஷரங்களாகிய கார்த்தவீர்ய மந்திரத்தை ஜபம் செய்ய வேண்டும் என்று இதில் கூறப்பட்டுள்ளது. துயர், அச்சம் ஆகியவற்றை நீக்க வல்லதும் மன மயக்கத்தை தெளிவிக்க வல்லதும் பிறர் ஏற்படுத்திய தடைகளை உடைக்க வல்லதும் செல்வத்தை சேர்த்து செயலை சிறப்பாக செய்விப்பதும் ஆகிய இந்த மந்திரத்தில் உள்ள 10 அக்ஷரங்கள் அவற்றை பின்னோக்கி படிக்கும்போது 20 ஆக மாறுவதால் விம்சதி அக்ஷர: என்று அழைக்கப்படுகிறது.

**பிரம்மகேச்வர தந்த்ரம்:-**

பிரம்மகேஸ்வர தந்த்ரம் என்னும் சக்தி சம்மந்தமான தந்திர நூலில் சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் நடக்கும் உரையாடலில் கார்த்தவீர்யார்ஜுன தந்த்ரம் காணப்படுகிறது. இதில் கார்த்தவீர்யார்ஜுன யந்திரம் செய்வதற்கு முன்னால் என்ன என்ன முன்னெச்சரிக்கை நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றியும், செய்வது அறிவதற்கான நேரத்தை எவ்வாறு தீர்மானிக்க வேண்டும் என்பதையும், இந்த மந்திரத்தை ஜபம் செய்வதால் ஏற்படும் நன்மைகள் குறித்தும் இந்தப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. ஸ்லோகத்தில் கூறப்பட்டுள்ளது. குறிப்பிட்ட ஒரு சில திரவியங்களால் எந்திரத்திற்கு நன்னீராடல் செய்வித்து அந்த நீரை ஒரு வருட

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

காலம் உட்கொள்ள வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. இதனை தொடர்ந்து கார்த்தவீர்யார்ஜுன தீபவிதியும் கூறப் பட்டுள்ளது.

**கார்த்தவீர்யார்ஜுனமந்திரம் :-**

இந்தக் கார்த்தவீர்யார்ஜுன மந்திரத்தில் காணப்படும் நியாஸங்கள் மற்றும் தியானங்கள் மந்த்திரத்தில் மாறுபடுகின்ன. மந்திரம் மற்றும் தியானம் பற்றி தீர்மானிக்க கூடியதாக இருக்கும் இந்த மந்திரத்தை தினந்தோறும் தபித்தால் நன்மைகள் உண்டாகும்.

**கார்த்தவீர்யார்ஜுனயந்திரங்கள்:-**

கார்த்தவீர்யார்ஜுனனின் யந்திரங்கள் திருடர் பயம், வைசூரியிலிருந்து (அம்மை நோய்) காத்தல், எதிரிகளின் கர்வத்தை அடக்க, அரக்கர்களின் அட்டூழியத்தை அழித்தல், தீய வர்களை ஒடுக்குல், துயரைப் போக்குதல், இயற்கையால் ஏற் படும். அழிவுகளை தடுத்தல், இவற்றிற்காகவும், நலம், செல்வம், புகழ், ஆயுள், நல்லறிவு, நல்லுணர்வு பிறரை வயப்ப டுத்துதல் போன்ற விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளுதல் போன்றவற்றை அடைவதற்காக இந்த யந்திரத்தை தங்க தகட்டில் எழுதி இந்த நூலில் முன் கூறி இருப்பது போல் நன்னீராட்டி அந்த நீரை உட்கொள்ளுதல் வேண்டும்.

**கார்த்தவீர்யார்ஜுனசக்ரம்:-**

கார்த்தவீர்யார்ஜுனனின் சக்கரத்தில் யந்திரத்தை தங்க தகட்டில் எழுதி வழிபட்டு வருதல், எல்லா நலன்களை வழங்கும் அந்த யந்திரத்தினை வீட்டில் வைத்து வழிபடுதல் மற்றும் படமாக மாற்றி வைத்தல் மிகவும் நன்மை பயக்கும்.

CC-0TSarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

**அணிவதற்கான யந்திரம்:-**

கார்த்தவீர்யார்ஜுன யந்திரமானது மிக முக்கியமான யந்திரமாகும். இதில் கூறப்பட்டுள்ள பீஜமந்திரம் படத்தில் கண்டுள்ளபடி எட்டு (8) இதழ்கள் உள்ள தாமரை போன்று வடிவமைத்து முறைப்படி வழிபட்டு கழுத்திலோ, கையிலோ இதனை அணிந்தால் எல்லா விதமான தீமைகளில் இருந்தும் விலக்கி, நன்மையை உண்டாக்கக் கூடியதாக இந்த யந்திரம் அமையும்.

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

श्रीः

# श्रीकार्तवीर्यार्जुनमहामन्त्रः

उड्डामिरेश्वरतन्त्रोक्तम्

श्रीगणेशाय नमः

अस्य श्री कार्तवीर्यार्जुनकवचस्तोत्रमहामन्त्रस्य दत्तात्रेयो भगवान्नृषिः ।।

अनुष्टुप् छन्दः ।।

श्री कार्तवीर्यार्जुनो विष्णुश्चक्रवर्ती देवता ।।

कृतवीर्यो बीजम् ।

सहस्रबाहुश्शक्तिः ।

अव्याहतः कीलकम् ।

कार्तवीर्यार्जुनप्रसादसिद्धये जपेविनियोगः ।।

ओं राजन्यचक्रवर्तिने अङ्गुष्ठाभ्याम् नमः ।

वीराय चक्रवर्तिने तर्जनीभ्याम् नमः ।

शूराय चक्रवर्तिने मध्यमाभ्याम् नमः ।

माहिष्मतीपतये चक्रवर्तिने अनामिकाभ्यां नमः ।

रेवाम्बुलीलासन्तृप्त – परितृप्त – दशास्य –

चक्रवर्तिने कनिष्ठिकाभ्याम् नमः ।

कारागृहप्रतिबन्धितदशाश्य चक्रवर्तिने करतलकरपृष्ठाभ्याम् नमः ।

राजन्यचक्रवर्तिने हृदयाय नमः ।

वीराय चक्रवर्तिने शिरसे स्वाहा ।

शूराय चक्रवर्तिने शिखायै वषट् ।

माहिष्मतीपतये चक्रवर्तिने कवचाय हुम् ।

CC-0.TSarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

रेवाबुलीलासन्तृप्तपरितृप्तदशास्यचक्रवर्तिने नेत्रत्रयाय वौषट् ।
कारागृहप्रतिबन्धितदशास्यचक्रवर्तिने अस्त्राय फट् ।
भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ।।

**ध्यानम्**

सहस्रबाहुं सशरं सचापं रक्ताम्बरं रत्नकिरीटकुण्डलम् ।
चोरारिदुष्टभयनाशनमिष्टदं तं ध्यायेन्महाबलविजृम्भितकार्तवीर्यम् ।। 1

अव्यात्सर्वभयात्प्रभाकरनिभः प्रद्योतनो नूतनः
स्वर्णस्रक् परिवीतकन्धरधरो रक्तांशुकोष्णीषवान् ।
नानाकल्पविभूषणः करसहस्रार्धात्तबाणासनो
बाणर्धात्तसहस्रबाहुरनिशं भूवल्लभो नः प्रभुः ।। 2

**श्रीदेव्युवाच ।**

देवादिदेव सर्वज्ञ सर्वभूतहिते रत ।
केन रक्षा भवेन्नृणां भीतानां विविधापदि ।।

राजचोरादि पीडासु शस्त्राग्निविषपातने ।
मारिदुस्स्वप्नपीडासु ग्रहरोगभयेषु च ।।

ज्वरापस्मारपीडासु सिंहव्याघ्रनिपातने ।
राक्षस-असुरवेतालपिशाचप्रेत-पातने ।। 3

महाभये महानाशे महानावगतेऽर्णवे ।
महामृत्युभये घोरे महाकलहसम्भवे ।। 4

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

केनोपायेन शान्तिः स्यात् साधकानां महेश्वर ।
अनष्टद्रव्यरक्षा च नष्टस्य पुनरागमः ।। 5

सर्वाकर्षणसंक्षोभसर्वसंहननं तथा ।
भवत्यभीष्टदं नृणां केन तद्वद मे शिव ।। 6

**ईश्वर उवाच ।**

शृणु गुह्यतमं देवि गोपनीयं प्रयत्नतः ।
अवाच्यमपि वक्ष्यामि तव लोकहिताय वै ।। 7

कवचं कार्तवीर्यस्य साङ्गावरणकं क्रमात् ।
स्वमूर्तिशक्तिमन्त्रौघसहितं ध्यानपूर्वकम् ।। 8

सहस्रादित्यसंकाशे नानारत्नसमुज्ज्वले ।
भास्वद्ध्वजपताकाढ्ये तुरङ्गायुतशोभिते ।। 9

महासंवर्तक्रान्तेमहाराजविराजिते ।
समुद्धृतमहाच्छत्रवितानितवियत्पथे ।। 10

निक्वणत्किंकिणीजाले चलच्चामरमण्डिते ।
महारथ्यावलयिते सर्वालङ्कारशोभिते ।। 11

महावररथे दीप्ते नानाशस्त्रविराजिते ।
सुस्थितं विपुलोदारसहस्रभुजमण्डलम् ।। 12

वामैरुदारैः कोदण्डान् दधानमपरैश्शरान् ।
किरीटहारमुकुटकेयूरवलयाङ्गदैः ।। 13

CC-0TSarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

मुद्रिकोदरबन्धाद्यैः काञ्चीनूपुरकादिभिः ।
भूषितं विविधाकल्पैर्भास्वरैस्सुविराजितम् ।। 14

आबद्धकवचं वीरं सुप्रसन्नाननाम्बुजम् ।
धनुर्ज्यासिंहनादेन कम्पयन्तं जगत्त्रयम् ।। 15

सर्वशत्रुक्षयकरं सर्वव्याधिविनाशनम् ।
सर्वसंपत्प्रदातारं विजयश्रीनिषेवितम् ।। 16

सर्वसौभाग्यदं भद्रं भक्तानां भयनाशनम् ।
दिव्यमाल्यानुलेपाङ्गं सर्वलक्षणसंयुतम् ।। 17

रथनागाश्वपादातिवृन्दमध्यगमीश्वरम् ।
वरदं चक्रवर्तीनां आद्यं लोकैकपालकम् ।। 18

सभानोदितसाहस्र–सूर्येन्दुज्वलनप्रभम् ।
उदितादित्यसंकाशं कुण्डलद्वयशोभितम् ।। 19

महायोगबलैश्वर्यकीर्त्याक्रान्तजगत्त्रयम् ।
श्रीमच्चक्रं हरेरंशादवतीर्णं महाबलम् ।। 20

सम्यगात्माविभेदेन ध्यात्वा रक्षामुदीरयेत् ।
दत्तात्रेयो ऋर्षिः प्रोक्तोऽनुष्टुप्छन्दः प्रकीर्तितम् ।। 21

कार्तवीर्यार्जुनो विष्णुश्चक्रवर्ती च देवता ।
विनियोगश्च रक्षायै सर्वत्र परिकीर्तितः ।। 22

CC-0. Sarasvati Mahal Series. Digitized by Sri Muthulakshmi Research Academy

